உ

# பாராயணைத் திரட்டு



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

ஜகத்குரு

## ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகள்

அவர்களின்

அருளாணைப்படி இலவசமாக வெளியிடப்பெற்றது

வெளியீடு ;
இந்து சமய மன்றம்

1, சாலைத் தெரு,
காஞ்சிபுரம்-631502

டிசம்பர்
1987



# விநாயகர்

வாக்குண்டாம் நல்லமனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி. நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு (1)

கணபதி என்றிடக் கலங்கும் வல்வினை
கணபதி என்றிடக் காலனும் கைதொழும்
கணபதி என்றிடக் கருமம் ஆதலால்
கணபதி என்றிடக் கவலை தீருமே (2)

பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன் - கோலம் செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீ எனக்குச்
சங்கத்தமிழ் மூன்றும் தா. (3)

(நாமாவளி)

கணேச சரணம் சரணம் கணேசா
கணேச சரணம் சரணம் கணேசா
கணபதிராயா கஜமுக நாதா
கௌரீ புதல்வா காப்பாயே.
ஜெய் கணேச ஜெய் கணேச ஜெய் கணேச பாஹிமாம்
ஜெய் கணேச ஜெய் கணேச ஜெய் கணேச ரக்ஷமாம்



# சுப்பிரமணியர்

தண்டாயுதமும் தனிவேலும், தன்கரத்தில்
கொண்டாடல் செய்கின்ற குருநாதா - வண்டாரும்
செங்கடம்பு பூத்ததிண்தோள் சேவகனே நீ எனது
சங்கடங்கள் எல்லாம் தவிர். (1)

அபகார நிந்தைபட்டு உழலாதே
அறியாத வஞ்சகரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
உனைநான் நினைந்தருள் பெறுவேனோ !
இபமா முகன் தனக்கு இளையோனே !
இமவான் மடந்தை உத்தமிபாலா !
ஜபமாலை தந்தசற் குருநாதா !
திருவாவினன்குடிப் பெருமாளே ! (2)

ஏறுமயில் ஏறி விளையாடு முகம் ஒன்றே
ஈசருடன ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறும் அடியார்கள் வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம் புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுகமான பொருள் நீ அருளல் வேண்டும்
ஆதி அருணசலம் அமர்ந்த பெருமாளே. (3

(நாமாவளி)

| | | | |
|---|---|---|---|
| சுப்ரமண்யம் | சுப்ரமண்யம் | ஓம் சரவணபவ | சுப்ரமண்யம் |
| ,, | ,, | குகசரவணபவ | ,, |
| ,, | ,, | சரவணபவகுக | ,, |
| ,, | ,, | சம்புகுமாரா | ,, |
| ,, | ,, | கார்த்திகேயா | ,, |
| ,, | ,, | கலியுகவரதா | ,, |
| ,, | ,, | சிவசிவசண்முக | ,, |
| ,, | ,, | காப்பாய்நாளும் | ,, |

| | | |
|---|---|---|
| அன்பருக்கு அன்பனே நீ | வா வா | முருகா |
| ஆறுபடை வீடுடையாய் | ,, | ,, |
| இன்பமய ஜோதியே நீ | ,, | ,, |
| ஈசன் உமைபாலகனே | ,, | ,, |
| உரகநாபன் மருகனே நீ | ,, | ,, |
| ஊமைக்கு அருள் புரிந்தவனே | ,, | ,, |
| எட்டுக்குடி வேலவா நீ | ,, | ,, |
| ஏறுமயில் ஏறியே நீ | ,, | ,, |
| ஐங்கரனுக்கு இளையவனே | ,, | ,, |
| அகிலலோக நாயகனே | ,, | ,, |
| ஒய்யாரி வள்ளிலோலா | ,, | ,, |
| ஓங்காரத் தத்துவமே | ,, | ,, |
| ஔவைக்குபதேசித்தவா | ,, | ,, |
| ஆறுமுகவேலவனே | ,, | ,, |

வா வா முருகா வடிவேல் அழகா
வேல் வேல் முருகா வெற்றிவேல் முருகா
வெற்றிவேல் முருகா திருமால் மருகா
வா வா முருகா வள்ளி மணாளா
ஓடிவா முருகா உமைசக்தி பாலா
பாடினோம் முருகா பரமதயாளா.

(வெற்றிவேல் முருகனுக்கு ஹரோ ஹர)



# சிவபெருமான்

நன்றுடையானைத் தீயதில்லானை நரை வெள்ளேறு
ஒன்றுடையானை உமையொரு பாகம் உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறஎன் உள்ளம் குளிருமே.

(சம்பந்தர்) (1)

பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்தும் சொல் ஆனாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனும் தீயானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

(அப்பர்) (2)

அருள் பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே
ஆரமிர்தே என்கண்ணே அரியவான
பொருள் அனைத்தும் தரும் பொருளே கருணைநீங்காப்
பூரணமாய் நின்ற ஒன்றே புனிதவாழ்வே
கருதரிய கருத்சதனுள் கருத்தாய் மேவிக்
காலமும் தேசமும் வகுத்துக் கருவியாதி
விரிவினையும் கூட்டி உயிர்த்திரளை யாட்டும்
விழுப்பொருளே யான்சொலும் விண்ணப்பம்கேளே

(தாயுமானவர்) (3)

சிவ சிவ சிவ சிவ சிவாய நம ஓம்
ஹர ஹர ஹர ஹர ஹராய நம ஓம்
சிவாய நம ஓம் ஹராய நம ஓம்
சிவாய நம ஓம் ஹராய நம ஓம்
சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ
சாம்ப சதாசிவ சாம்ப சதாசிவ

சம்போ சங்கர நடராஜா
சம்போ சங்கர சிவராஜா
சம்போ சங்கர உமாபதே
சம்போ சங்கர பசுபதே
சம்போ சங்கர மஹாலிங்கா
சம்போ சங்கர மஹாதேவா
ஹர ஹர சங்கர மஹாதேவா
பார்வதீ ரமணா சதாசிவா
சிவாய நம ஓம் நமசிவாயா
சிவாய நம ஓம் நமசிவாயா.



# அம்பிகை

தனந்தரும் கல்விதரும் ஒருநாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவும்தரும் நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாம் தரும் அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே (1)

கலையாத கல்வியும் குறையாத வயதும் ஓர்
கபடு வாராத நட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபிணி இலாத உடலும்,
சலியாத மனமும் அன்பு அகலாத மனைவியும்
தவறாத சந்தானமும்.
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத கோலும் ஒரு
துன்பம் இல்லாத வாழ்வும்
துய்ய நின்பாதத்தில் அன்பும் உதவிப் பெரிய
தொண்டரொடு கூட்டுகண்டாய்

அலையாழி அறிதுயிலும் மாயனது தங்கையே
ஆதிகடவூரின் வாழ்வே !
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி;
அருள்வாய் ! அபிராமியே! (2)

சுந்தரி சவுந்தரி நிரந்தரி துரந்தரி
சோதியாய் நின்ற உமையே
சுக்கிர வாரத்திலுனை கண்டு தரிசித்தவர்கள்
துன்பத்தை நீக்கி விடுவாய்
சிந்தைதனில் உன்பாதம் தன்னையே தொழுபவர்கள்
துயரத்தை மாற்றி விடுவாய்
ஜெகமெலா முன்மாய்கை புகழ என்னால் ஆமோ
சிறியனால் முடிந்திடாது.
சொந்தஉன் மைந்தனைப் இரட்சிக்கச்
சிறியகடன் உன்னதம்மா
சிவசிவ மகேஸ்வரி பரமனிட ஈஸ்வரி
சிரோன்மணி மனோன்மணியு நீ
அந்தரி துரந்தரி நிரந்தரி பரம்பரி
அனாத ரட்சகியும் நீயே
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும்
அம்மை காமாட்சி உமையே (3)

(நாமாவளி)

ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்
ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்சக்தி ஓம்

தீனதயாபரி பூர்ணகடாக்ஷி திரிபுரசுந்தரி தேவிமீனாட்சி
காஞ்சியில்வாழும் காமாட்சி கருணையே புரிவாய் காமாட்சி
தீனதயாபரி பூர்ணகடாக்ஷி திரிபுரசுந்தரி தேவி மீனாட்சி
காசியின் சத்யவிசாலாட்சி காப்பாய் நாளும் ஸ்ரீசக்தி.



# திருமால்

(மகா விஷ்ணு)

குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள் விசும்பு அருளும்
அருளொடு பெருநலம் அளிக்கும்
வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.

பச்சைமாமலை போல்மேனி பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா அமரர் ஏறே ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகர் உளானே (2)

வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப்பறை கொண்ட வாற்றை அணி புதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கு இப்பரிசு உரைப்பார் ஈரிரண்டு மால் வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் எம்பாவாய் (3)

(நாமாவளி)

ஹரே ராம ஹரேராம ராமராம ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண
ஹரேஹரே

கோவிந்த கோவிந்த கோபால ராதாரமண
கோவிந்த கோவிந்த கோபால ராதாரமண

ஸ்ரீராம் ஜெயராம் ஜெய ஜெய ராம்
ஸ்ரீராம் ஜெயராம் ஜெய ஜெயராம்

ரகுபதி ராகவ ராஜாராம்
பதித பாவன சீதாராம்

ராமராம ஜெய ராஜாராம்
ராமராம ஜெய சீதாராம்

ராமராம ராமராம ராமராம ராமராம
ராமராம ராமராம ராமசீதா ராமராம்

கோவிந்த வரதா ஸ்ரீஹரி கோபால வரதா
பாண்டுரங்க வரதா ஸ்ரீஹரி பண்டரிபுரவரதா

கோவிந்த கண்ணா ஸ்ரீஹரி கோபால கண்ணா
பாண்டுரங்க கண்ணா ஸ்ரீஹரி பண்டரிபுர கண்ணா



# ஆஞ்சநேயா

அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்றாக ஆரியற்காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக் கண்டு அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவன் எம்மை அளித்துக்
காப்பான்

(நாமாவளி)

ஜெய் அநுமான் ஜெய் அநுமான்
மாருதிராயா ஜெய் அநுமான்
அஞ்சனீபுத்ர அநுமந்தா, அருள்வாய் நாளும் அநுமந்தா,

(பொது நாமாவளி)

விக்னராஜா பிரபு விக்னராஜா
பக்தர்கள் இருதய வாசா விக்னராஜா
சுப்ரமண்யா பிரபு சுப்ரமண்யா
திருப்பரங்குன்ற வாசா சுப்ரமண்யா
சுந்தரேசா பிரபு சுந்தரேசா
காளத்தி க்ஷேத்ர வாசா சுந்தரேசா
நடராஜா பிரபு நடராஜா
சிதம்பர க்ஷேத்ர வாசா நடராஜா

ராமராஜா பிரபு ராமராஜா
அயோத்யாபுர நிவாச ராமராஜா
கிருஷ்ணராஜா பிரபு கிருஷ்ணராஜா
துவாரகாபுர நிவாச கிருஷ்ணராஜா
ரங்கராஜா பிரபு ரங்கராஜா
ஸ்ரீரங்கக்ஷேத்ர வாசா ரங்கராஜா
வேங்கடேசா பிரபு வேங்கடேசா
திருப்பதி க்ஷேத்ரவாசா வேங்கடேசா
பாண்டுரங்கா பிரபு பாண்டுரங்கா
பண்டரிபுர நிவாசா பாண்டுரங்கா
ஆஞ்சநேயா பிரபு ஆஞ்சநேயா
ராமபக்த இருதயவாசா ஆஞ்சநேயா.

(பாராயணம் முடிக்கும்போது)

நமப்பார்வதீ பதயே—ஹரஹர மகாதேவா
தென்னுடைய சிவனே போற்றி—எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி
ஸ்ரீ ஆஞ்சநேயவரத கோவிந்தா—கோவிந்தா. கோவிந்தா
வெற்றி வேல் முருகனுக்கு—ஹரோ ஹர.

## வழிபாட்டு நூல்கள்

| | | |
|---|---|---|
| ஸ்ரீ விநாயக சதுர்த்தி பூஜை | 1 | 50 |
| கந்த சஷ்டி கவசம் (மூலமும் கருத்துரையும்) | 1 | 20 |
| ஸ்ரீ காமாக்ஷி சுப்ரபாதம் | 1 | 00 |
| ஸ்ரீ வேங்கடேச்வர சுப்ரபாதம் | 1 | 00 |
| நவக்கிரக ஸ்தோத்ரம் (உரையுடன்) | 1 | 50 |
| ஆதித்ய ஹ்ருதயம் | 1 | 00 |
| ஸ்ரீ ராமநவமி பூஜாவிதி | 1 | 00 |
| ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | | 50 |
| சண்முக கவசம் | 1 | 20 |
| கோளறு பதிகம் (உரையுடன்) | 0 | 80 |
| சகலகலாவல்லி மாலை (உரையுடன்) | 0 | 80 |
| விரதங்கள் | 1 | 50 |
| அறுபடை வீடுகள் | 1 | 50 |
| திருப்பாவை (உரையுடன்) | 1 | 00 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 2 | 00 |
| ஸ்ரீ சௌந்தர்ய லஹரீ | | 20 |
| ஸ்ரீ லலிதா திரி சதி | 1 | 20 |
| தியானத்தின் பலன்கள் | 1 | 20 |
| மஹிஷாஸுரமர்த்தினி ஸ்தோத்ரம் | 1 | 20 |
| திருப்புகழ் அமுதம் (உரையுடன்) | 1 | 00 |
| திருவெம்பாவை | 1 | 00 |
| ஸ்ரீஸ்துதி (உரையுடன்) | 0 | 70 |
| தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம் (உரையுடன்) | 1 | 00 |
| அபிராமி அந்தாதி (உரையுடன்) | 2 | 00 |

**STAR PUBLICATION**

72, Big Street,

Triplicane – Madras – 5

PRINTED BY THE ORIENT LITHO PRESS, SIVAKASI